بسم الله

பிஸ்மில்லாஹி.

# நாகூர்

# நாயகப்பதிகம்.

இஃது

இளையான்குடி மாஜி ஸ்பெஷல் மாஜிஸ்திரேட்டும்
சோதுகுடி சாத்தனிக்கிராமம் அஃதாரும்
மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்களி லொருவருமாகிய

எம். கே. எம். அப்துல்காதிறு ராவுத்தர்

அவர்களாலியற்றப்பெற்று

சோதுகுடி
அ. க. நா. முகம்மதிபுராகீம் அவர்களால்
மதுரை விவேகபாநு அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.

1907.

# PREFACE.

One of the striking features of this century is doubtless the marvellous impetus given in various places to the revival of glory of the Tamil literature and the appearance in our midst of many talented Tamil scholars of sterling merits and proficiency. It should be gratefully acknowledged by all that the Madura Tamil Sangam, which is yet in its infancy, is mainly instrumental in producing this agreeable phenomenon, and it seems to exercise a mysterious but powerful influence upon the minds of the Tamil loving public so as to induce them to endeavour to develop and enrich the grandest legacy of their wise ancestors—the literary productions in Tamil. The fine brochure which is now presented to the appreciative public is of a very interesting kind and its young and intelligent Author, M. K. M. Abdul

Kadir Rowther of Soathookudi, has made it to illustrate a combination of simplicity of diction, and excellence of poetic description. The brief work amounting to ten exquisitely beautiful verses is dedicated to the praise of the Moslem Saint, *Shahul Hamitholi Andavar Avergal* of Nagore and the spirit of high devotion pervading them richly supplements their singular value and merits. I am confident that the public will most thankfully appreciate the service thus rendered to them by the young poet and the Madura Tamil Sangam has abundant reason for self-congratulation, as he is one of the trusted scholars devoutly working in advancement of its interest.

P. S. SUBRAMANIA AIYER,
*Vice President,*
*Madura Tamil Sangam,*
MADURA.

---

# சாற்றுக்கவிகள்.

## வெண்பா.

இது

நாகூர் தர்ஹா மஹாவித்துவானும் நாகூர் வித்வஜன சேகரரும்
மதுரைத் தமிழ்ச்சங்கப்புலவர்களிலொருவருமாகிய
ஸ்ரீமத். வா.குலாம்காதிறு நாவலரவர்களியற்றியது.

---

நாகூர் ஹமீதொலியி னற்று ளிணைபோற்றிப்
பாகூர் பதிகநன்கு பாடினுன்—வாகூர்மாச்
சோதுகுடி வாழுமப் துல்கா திறுகல்வி
மாதுகுடி கொண்டவித்து வான்.

---

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான் கீழக்கரை மகா-ா-ா-ஸ்ரீ
பா. பு ச. சுல்தான் அப்துல்காதிறுப் புலவர்
அவர்களியற்றிய கவிகள்.

---

வலம்புரித் தரள மணிநிலாக் காலும் வாரிதிக் கரையுறு நாகூர், கலந்தினி துறையும் பெருமைசேர் ஷாகுல் கமிதொலி நாயக மணிமேல், நலந்தரு பதிக மிசைத்தன னெமது நற் றமிழ்ப் புலவரே ருகி, யிலங்குசீர் அப்துல் காதிறு நாம மெய்திய பெரும்புக ழுடையோன்.

சொன்னலம் பொருளி னன்னல மெல்லாந் துலங்குமிப் பதிகநன் கோர்ந்து, தன்னுளங் குழைந்து பலர்க்குப கரிப்பான் றகுவகை யச்சிடு வித்தான், கன்னலுங் கமுகுந் திகழ்வளச் சோது குடிநகர் களிக்கவாழ் கனஞ்சேர், முன்னவனெழின் முகம்மதி புராகீம் மூதறிவுடைய சற்குணனே.

---

இளையான்குடி ஆயுள்வேத பாஷ்கரரும் வித்துவானுமாகிய
மகா-ா-ா-ஸ்ரீ பண்டிதம் காதிறுபாவா அவர்கள் குமாரரும்
இந்நூலாசிரியரின் மாணாக்கருமாகிய மகா-ா-ா-ஸ்ரீ பண்டிதம்
செய்யதப்துல்காதிறு அவர்களியற்றியது.

---

திருப்பதிகண்ணியநாகூர் ஷாகுல்ஹமீ தொலியர்சர் சீரெல்லாமித், திருப்பதிக மதினிலவச் செய்தனனு னல்வினையிற் சோரார் நெஞ்சைத், திருப்பதிக மதிவலியா னெமக்கினிய குருகலையிற் சிறந்தோன் ஞாலத், திருப்பதிக ளிறைசோது குடிபுராக்கு மப்துல்கா திறுசீ மானே. (க)

---





பிஸ்மில்லாஹி.

# நாகூர் நாயகப்பதிகம்.



## காப்பு.

### வெண்பா.

சீரார்நா கையொலியின் செய்யதிருத் தாள்போற்றிப்
பாரார் பதிகமதைப் பாடுதற்குப்—பேராரு
வித்தனே மெய்யான நின்மலனே யாரருள்சால்
கத்தனே முன்னின்று கா.

---

### ஆசிரியவிருத்தம்.

திருமுக மலரின் முத்தமிட் டினிய தெள்ளமு தூட்டியுண் மகிழ்ச்சி, சிறந்துழி யவனோர் பகீரடுத் திரக்கச் சித்தமும் பகீரென வருந்தித், தருவதற் கிலையே யெனநினைந் திரங்குந் தருணமப் பாத்திமா வவர்கள், தழைத்திடப் பொற்கா சொன்றுசெவ் வாயாற் றந்தருள் கருணைவா ரிதியே, பெருமையா முங்க டரிசன மெளியே ன் பெரும்படி யருள்செய வேண்டும். பிரசமு மலரும் பெய்ததற் கெதிராப் பெருமணி துகிரலை வீசக், கருமுகினைய மருவலாற், கொள்ளக் கருதரு தவற்றையும் விடுத்துக், கமழ்பொழினாகை ம ருவிய ஷாகுல் கமிதொலி நாயக மணியே. (௧)

சுந்தர மிலங்கு முங்கள் பொன் மேனி தோய்தலா லெகின்மர மறிவு, தோன்றவாய் பேசித் தன்பல மெல்லாந் துன்னிய விதையி லா வாமுந், தந்திடப் பெற்ற சரித்திர முணர்ந்துந் தங்கள்தா் ஹா முன நின்று, சத்திய மாகக் கத்தமும் புகன்று தரிசியார் பேதமை யென்னே ! பந்தன முலேயும் பந்தன முலேயும் பயிலுமென் ன்டை யுபின் னிடையும், பஞ்சன கழலு மஞ்சன குழலும் பானல விழியு மின் மொழியுங், கந்தடு களிற்று ருளங்கவர் நகையுங் கவின்றபன் மாதர்மெய் வாசங், கமழ்பொழி ஞைகை மருவிய ஷாகுல் கமிதொலி நாயக மணியே. (உ)

புணரியின் மவுத்தாய்ப் பதினொரு வருடம் போனபின் னவ ன்மனே யாட்டி, புலம்பிநொந் தழுவ தறிந்துள மிரக்கம் பூண்டிரு காமுமேற் றாக்கித், தணவிலா தொருசா மந்தஆச் செய்து சபையு ளோர் வியக்கவன் னவனேத், தந்தருள் கருணை நிலயமே யுங்கள் தயவையே விரும்புவன் றமியேன், எணுமிடந் தோறுங் குடவளேக் குலமு மிலங்குபன் மணிகளு மறன்மே லெய்திய தோற்ற மாகம ண்டலத்தி லெண்ணிலா வெண்ணிலா மேவக், கணவகை கதுவுங் காட்சியிற் கவினுங் கடற்கரைக் கைதையின் கானங், கமழ்பொழி ஞைகை மருவிய ஷாகுல் கமிதொலி நாயக மணியே. (ங)

உங்கள்பொன் னுடலின் வீசுவாள் வானத் தாடுசென் றுலெ னப் போய, தொன்றுகொல் வீசுங் காவட ருடலத் தாற்றறிந் தது வுமச் சோரர், தங்குலத் தவர்கள் பணிவதற்கிரங்கித் தறிபடு முட லெலாம் பொருந்தித், தழைத்திடப் புரிந்த கருணையு மறிந்தோர் த ம்முளம் பிறரிடம் புகுமோ! செங்கதி ரவனும் வெண்கதி ரவனு ஞ் சேர்ந்தொரு வழியிருந்தென்னச், செம்மணிக் குவையும் வெண்

மணிக் குவையுஞ் செறிந்திருள் சீத்தலா லெவருங், கங்குலும் பக லும் பங்கயங் குவளை காட்டிடக் கண்டுதேர்ந் திருக்குங், கமழ் பொழி ஞகை மருவிய ஷாகுல் கமிதொலி நாயக மணியே. (௪)

முன்னொரு மாதைக் கோறலாற் போந்த முதுபழி யாலொரு பாந்தள், முடித்தலைப் புகுந்து துடித்தலைப் புரிதன் முடித்தல விரு ம்பிவந் திறைஞ்சிச், சொன்னவர்க் கிரங்கிச் சென்னியிற் செங்கை சூ ட்டலும் நாசியின் வழியாத், துண்ணென விழுந்து போயதே லுங் கள் தொல்புகழ் கூறுதற் கெளிதோ, மின்னவிர்ந் தோங்கு வேங் கைசம் பகத்தின் விரிமலர் மதுவினை வெறுத்து, மென்சிறை வண் டு வேசியர்க் கண்டு விலகியிற் புகுவர்போன் மண்டு, கன்னலின் புடைசூழ் புன்னைமர் தாரங் கற்பகத் தாரிட மருவக், கமழ்பொழி ஞகை மருவிய ஷாகுல் கமிதொலி நாயக மணியே. (௫)

ஈரிரு நூற்று நால்வரோ டெய்தி யெண்ணிலா மன்னவன் ப யமே, விட்டதாற் பயமே விட்டநா வாய்க ளெவற்றையும் விடா மைகண் டெவருந், தேரவோர் சிறிய தாளினை யெடுத்துச் செழும் புனற் படுத்தலும் புணையாய்த், திகழ்ந்தக னதியை யிகந்ததா கிய நுஞ் செய்தியை யறிந்துவந் தடைந்தேன், பாரினிற் பாச பந்தமா நதியிற் பட்டுழ லாதுமெய்ஞ் ஞானப், பயனரு ளுங்க டாட்புணை யடியேன் பற்றுமா றருள்செய வேண்டுங், காரினைக் கலந்து துண ருகு மலரின் கந்தமெண் டிசையினும் பரவிக், கமழ்பொழி ஞகை மருவிய ஷாகுல் கமிதொலி நாயக மணியே. (௬)

நவ்வியந் துவக்குப் பொதியினைப் பகிர்கள் நாடிவந் தெடுக்கவ ர்த் தகர்கள், நலிவுறை தநோக்கி யஞ்சன்மின் விலையா நன்னிதி யெ

னைத்தனை யனைத்தே, யிவ்விடத் துளது தொட்டடை வீரென் றெ
ழின்மல ரடியினுற் குறிப்பிட்,டிடமிட மெல்லாம்பொன்மய மாயதெ
னினெனே நங்கழற் பெருமை, செவ்விய தருவே திவ்விய வுருவே
செந்நெறி காட்டுமெய்க் குருவே, சிற்பர வெளியே யற்புத வொளி
யே சிந்தையுட் கனிந்தெழுங் களியே, கௌவையம் புணரிப் புலா
ன்மண மாறிக் கரந்திட மலர்மண மீறிக், கமழ்பொழி ஞகை மரு
விய ஷாகுல் கமிதொலி நாயக மணியே. (எ)

வரையிடை மோதுங் கரமிறல் மான மகான்களுக் காற்றினல்
தனக்கே, வரலறி யாமன் விடவுண விடவு மற்றதைத் தாங்களுட்
கொள்ள, அரசன்வீ வுற்ற தறிந்தவன் றமர்க ளயர்வுகண் டாவி
யை யுதவு, மருளின்வா ரிதியே பொறுமையின் பதியே யருமறை
நூல்புகல் விதியே, பெருமைசேர் துதியே பேசுநன் மதியே பெற்ற
வர்க் குயர்பர கதியே, பிறங்குசந் நிதியே விளங்குநன் னிதியே பே
தையேற் கருளகவித் ததியே, கரிமத மீரு மரிவையர் தாருங் கலின
மான் விலாளியுங் கலவிக், கமழ்பொழி ஞகை மருவிய ஷாகுல் கமி
தொலி நாயக மணியே. (அ)

முத்தலை முறையாய்த் தொடர்ந்தொரு மாதை மொய்ம்புறப்
பிடித்ததோர் கபீது, முன்னடுத் துங்க ளாணையை மொழிய முறுக்
கெலாந் தணிந்துளத் தச்சம், வைத்தலை மானத் தன்னுரு வெடுத்து
மற்றவட் பற்றிய சரிதம், வழுத்தியே பிரிதல் விழுத்தகு முதியோர்
வழுத்திடத் தெரிந்தவர் தடைந்தேன், பித்தலையு ளத்தோர் போ
லமு வாசைப் பேய்பிடித் தாட்டலா லயர்ந்து, பெரியனைத் துறந்து
சிறியரிற் சிறந்து பேற்றினை மறந்துவா டிவேனை, கத்தலைப் புணரி
முத்தினைக் கொழிக்குங் கரையெலாங் கரையறு கைதை, கமழ்
பொழி ஞகை மருவிய ஷாகுல் கமிதொலி நாயக மணியே. (கூ)

பெண்கலை யொருசூற் கொண்டிரு கன்றைப் பெற்றொரு சூரன் வாய்க் கொள்ளப், பிறவியந் தகன்கண் பெற்றிழந் தென்னப் பெரிதுநொந் தயர்ந்தழு துள்ளம், புண்கொளற் கிரங்கிச் சுணகனுண் டெஞ்சிப் புவிபடு குரங்கொடு சிறிது, போதிலவ் விருமான் கன்றையு மழைத்த புண்ணிய குத்புவே சரணம், விண்கொளற் கடங்கா வகைபடர்ந் தடர்ந்து மென்றழை நகைமலர் பிரசம், மேயகாய் கனிதண் ணிழல்கொடி வீடு விரிசிறை யளியிசை மேவிக், கண்கொளற்கரிய காட்சியிற் சிறந்து காண்பவர் கருத்தெலாங் கவருங், கமழ் பொழி ஞை மருவிய ஷாகுல் ஹமிதொலி நாயக மணியே. (௰)

முற்றிற்று.



விவேகபாநு அச்சியந்திரசாலை

## அச்சு வேலைகள்.

தமிழிலும் இங்கிலீஷிலும், பலவிதமைகளாலும், கிலிட்டுகளாலும், திருமணப்பத்திரிகைகள், பட்டா, முச்சலிக்கா, ரசிது, உண்டியல், வக்காலத்துமுதலிய கோர்ட்டுச்சம்பந்தமானசகலவேலைகளும், புத்தகங்களும், வியாபார சம்பந்தமான சகலவேலைகளும், கணக்குப் புத்தகங்கள், வட்டிச்சிட்டைப் பாரங்கள், லெட்டர்ப்பாரங்கள், இலக்கணப்பிழைகளில்லாமல் திருத்தமாயும், பார்டர்களாலும், படங்களாலும், ஒவ்வொருவர் மனதையும் கிரகிக்கும்படி அலங்கரித்து சீக்கிரமாகவும் சார்சு சகாயமாகவும்செய்துகொடுக்கலாகும்.

உ

சிவமயம்.

## பயிண்டு வேலைகள்.

ரூலிங்மிஷன், நம்பரிங்மிஷன், கம்பித்தையல்மிஷன், கட்டிங்மிஷன், பர்ப்பரேஷன்மிஷன், முதலிய இயந்திரங்கள் எங்களிடமிருப்பதால், கிலிட்டுமுதலிய அலங்காரத்துடன் எவ்வித உயர்ந்த பயிண்டுகளும் குறைந்தசார்சுக்குத்தயார் செய்துகொடுக்கலாகும்.

நெ. 251, வடக்காவணிமூலவீதி,
மதுரை.